எ. வீரக்கருவி வருமாறு.

" முரசே நிசாளந் திமிலை துடுமை
யரசற் கெய்தும் பிறர்க்கல வென்ப "

என்னுதலிற்றோவெனின்? வீரக்கருவியாமாறு உணர்த்திற்று.

க. முரசு
உ. நிசாளம்
ங. திமிலை
ச. துடுமை

இவை நான்கும் வீரமுழவென்றவாறு. இவை வீரக் கருவியெனக் கொள்க. (பண்ணமை முழவு)

" அகமே புறமே புறப்புறம் பன்மை
நாளே காலமென் றாறும் வகுத்து
வாள்போல் விழியாய் வைத்தனர் முன்னோர் "

என்னுதலிற்றோவெனின்? முன்சொன்னவேற்றுமைப் பகுதியாமாறுணர்த்திற்று.

அவை, க. அகமுழவு
உ. புறமுழவு
ங. புறப்புற முழவு
ச. பன்மை முழவு
ரு. நாள் முழவு
சு. காலை முழவு

என அறுவகைப்படும்.

அவற்றுள், அகமுழவாவன
முன்சொன்ன உத்தமமான கருவிகள்.

அவை க. மத்தளம்
உ. சல்லி

---

74. பண்ணமை முழவாவன, முன்சொன்ன வீரமுழவு நான்கும். அவையாவன முரசு, நிசாளம், துடுமை, திமிலை எனவிவை. புறப்புற முழவாவன முற்கூறப்படாத நெய்தற்பறை முதலாயின. (சிலம்பு உரை)

௩. இடக்கை
௪. கரடிகை
௫. பேரிகை
௬. படகம்
௭. குடமுழவம்

இவையேழுமெனக் கொள்க.

புறமுழவாவன, மத்திமமான தண்ணுமை முதலான பன்னிரண்டுமெனக் கொள்க.

அவை
௧. தண்ணுமை
௨. தக்கை
௩. உடுக்கை
௪. தகுணிச்சம்
௫. கண்விடுதூம்பு
௬. விரலேறு
௭. தமருகம்
௮. தடாரி
௯. துடி
௰. உபாங்கி
௰௧. அமுதகுண்டலி
௰௨. அந்தரிமுழவு

புறப்புறமுழவாவன,

அதமமான பறை முதலிய நான்குமெனக்கொள்க.

(அதன்மமான) (வேறுபாடம்)

அவை
௧. பறை
௨. பாகம்
௩. சிறுபறை
௪. அடக்கம்

பன்மை முழவாவன (பண்ணமை முழவு)

அவை க. முரசு

உ. நிசாளம்

ங. துடுவையெனக் கொள்க. (துடுமை)

நாள்முழவாவது, நாழிகைப்பறை (ஆவதுநாட்பறை) காலமுழவாவது, துடியென்றவாறு.

இவ்வாறு அறுவகையுங்கண்டு கொள்க. ங.

96. நான்முகனுர் மத்தளஞ் சல்லி திருமாலாம்
ஆன்விடை யேறுர்தி யாவஞ்சி — மானக்
கறைவெழுவேற் கண்மடவாய் காதலுடன் மூன்றின்
முறைமையி தென்று மொழி.

என்னுதலிற்றேவெனின்? முதன் முழவு மூன்றிற்கும் அதிதேவதைகளை உணர்த்திற்று.

மத்தளத்திற்கு நான்முகன் தெய்வம் (அதிதேவதை).

இதற்கு, மெல்லென்பது, ஓசை ஆதலால் மத்தளம் என்று பெயராயிற்று. இக்கருவி, பல கூத்துக்கும் உரித்தாதலானும் பாடலெழுத்துக்கள் இதனுள்ளே பிறத்தலானும் முழவுகள் எல்லாம் இதனுள்ளே பிறத்தலானும் இது நான்முகன் என்று பெயராயிற்று.

சல்லியென்ற முழவுக்கு நாராயணன் தெய்வம்.

இது சல்லென்கிற ஓசையை உடைத்து ஆதலான் சல்லி என்று பெயராயிற்று. இது வன்மையை உடைத்தாதலால் நாராயணனென்று பெயராயிற்று.

(சல்லி—சல்லிகை)

ஆவஞ்சி, இதற்குத் தெய்வம் உருத்திரன். ஆவினுடைய வஞ்சித்தோலைப் போர்த்தலால் ஆவஞ்சி என்றும் பெயராயிற்று.

குடுக்கை, குடுப்பைக்கையாக உடைத்தாதலால் குடுக்கையென்று பெயராயிற்று.

இடக்கை, இவ்வினைக்கிரியை இடக்கையினாலே செய்தலால் இடக்கையென்று பெயராயிற்று என்பது இவற்றின் முறைமை இவ்வாறு கண்டுகொள்க என்றவாறு. ச.

97. முதலு மிடையுங் கடையுமெனச் சொன்னர்
உதய மதிய முபயம் — பதமுகத்தாற்
பாங்காய கீத நிருத்த வழிக்கிசைய
நீங்காம லாடப் படும்.

என்னுதலிற்றோவெனின்? முன்சொன்ன முழவுகள் மூன்று பெயர் பெற்றனவென உணர்த்திற்று.

அவை க. முதல்
உ. இடை (இடைக்கோள்)
ந. கடை என்பன

முதற்கருவியாவது,

மத்தளமானது, முதற்றாளம் கொள்ளுமிடத்துத் தகாரங் கொள்ளுதலால் இதற்கு முதற்கருவியென்று பெயராயிற்று.

இடைக்கோளாவது, (இடைக்கருவியாவது) சமக்கருவி சல்லியாதலால் இடைக்கருவியென்று பெயராயிற்று. குடுக்கை கடைக்கருவிக்குரித்தாதலால் இதனைக் கடைக் கருவியென்றும் வழங்கப்படும் எனக் கொள்க. இவ்வாறு முன்சொன்ன முழவுகள் மூன்று பெயர் பெற்றனவெனக் கொள்க.

---

75. ஆவஞ்சி எனினும் குடுக்கை எனினும் இடக்கை எனினும் ஒக்கும் அதற்கு ஆவினுடைய வஞ்சித்தோலைப் போர்த்தலால் ஆவஞ்சி என்று பெயராயிற்று குடுக்கையாக அடைத்தலால் குடுக்கை என்று பெயராயிற்று. வினைக்கிரியைகள் இடக்கையாற் செய்தலின் இடக்கை என்று பெயராயிற்று.
(சிலம்பு உரை)

உதயம் மதியம் உபய மென்பவற்றுள்,

உதயமென்பது சூரியன்

மதியமென்பது சந்திரன்

முன்சொன்ன மூன்று முழவினையும்,

சூரியாங்கமென்றும்

சந்திராங்கமென்றும்

உபயாங்கமென்றும் சொல்லவுமமையும். (உபயாங்கம் என்பது இரண்டிற்குமுரியது.)

பத முகத்தால் என்பது பதங்கள் பாடுவதற்கேற்ப, ஆடப்படுமென்பது, அதாவது, மேற்கூறிய வாச்சியங்களினலே கீத நிருத்த வழக்கிசையப் பாடப்படும் என்றவாறு. (வாசிக்கப் பெறும்)
(ஆடப்படும்—என்பதற்குப் பாடப்படும் என்ற வேறுபாடமுளது)
ரு.

98. மூன்ரு முதற்கடவுள் மூன்ரு மிடைக்கடவுள்
ஆன்ற கடையா மஃதென்ப — என்றுலகில்
மன்னவரும் மூவரே வாணெடுங்கண் மாமாதே
துன்னுங் கருவிக்குச் சூட்டு.

என்னுதலிற்ரோவெனின்? அதிதேவதைக்குரிய (தெய்வம்) எல்லாக்கருவிகளையும் உணர்த்துதல் நுதலிற்று.

மூன்ரு முதற்கடவுளென்பது

க. பிரமன் (பிரமா)

உ. விட்டுணு

ங. உருத்திரன்

இவர்கள் மூவர்க்குமியற்றப்படுவன, முன்சொன்ன முதற்கருவிகளேழும் என்றவாறு.

---

76. முதற்கருவிகள் ஏழும் மத்தளம், சல்லி, இடக்கை, கரடிகை பேரிகை, படகம், குடமுழவம், எனப்படுவ.

மூன்றுமிடைக்கடவுளென்பது,

க. வயிரவன்

உ. முருகன்

ங. துர்க்கை என இவர்கள் மூவர்க்கும் இயற்றப்படுவன, முன்சொன்ன இடைக்கருவிகள் பன்னிரண்டுமென்றவாறு.

ஆன்றகடையுமஃதென்ப என்பது. கடையான கடவுள் மூவரென்பது

க. காளி

உ. சாத்தன்

ங. காடுகாள்

இவர்கள் மூவர்க்குமியற்றப்படுவன, முன்சொன்ன கடைக்கருவிகள் நான்குமென்றவாறு.

மன்னவரும் மூவரென்பது,

க. சேரன்

உ. சோழன்

ங. பாண்டியன்

இவர்களுக்குரியன முன்சொன்ன வீரமுழவுகள் நான்கும் என்றவாறு.

துன்னும் கருவிக்குச் சூட்டு என்பது இவையிற்றுக்கு இதுவே முறைமையென்றவாறு. சூ.

முழவுமரபு முற்றும் (தோற்கருவி)
குருவாழ்க
சிவாசலபதி சகாயம்

---

77. இடைக்கருவிகள்பன்னிரண்டு தண்ணுமை, தக்கை, உடுக்கை, தகுணிச்சம், கண்விடுதூம்பு, விரலேறு, தமருகம், தடாரி, துடி, உபாங்கி, அமுதகுண்டலி, அந்தரிமுழவு.

கடைக்கருவிகள் நான்கு பறை, பாகம், சிறுபறை, அடக்கம்.

வீரக்கருவி நான்கு முரசு, நிசாளம், திமிலை, துடுமை.

## வாச்சிய மரபு—௨.

(உட்பிரிவு)

### பிண்ட மரபு

(பிண்டம், முழவு வாச்சியத்தின் முழுவுருவம்)

99. கருங்காலி செங்காலி வேம்பு பலாக்கஞ்சம்
நெருங்கியசீர்த் தண்குரவ மண்ணும் — பொருந்திய
ஊனமில் லாம லுயர்நிலத்திற் ரேன்றியவாம்
மானின் விழிமடவாய் வைப்பு.

(ஆனமில் லாம லயர்நிலத்துத் தோன்றியவாம்)
(வேறுபாடம்)

என்னுதலிற்ரோவெனின்? முழவுகளுக்குப் பிண்டமாகிய மரங்களிவை என்பதுணர்த்திற்று.

அவை
க. கருங்காலி
௨. செங்காலி
௩. வேம்பு
௪. பலா
௫. கஞ்சம்
௬. குரவம்
௭. மண் எனவிவை.

இவற்றுள், கஞ்சத்தாற் செய்வது உத்தமம்
மரத்தாற் செய்வது மத்திமம்
மண்ணாற் செய்வது அதமம்

இம்மரங்களில்
க. வடுப்படாதே
௨. பொத்துப்படாதே
௩. சாவாதே
௪. மூவாதே

இளமையின்றியே நடுவயதாய் உயர்ந்த சமதலமான நிலத்துளவான மரங்கள் முழவுகளுக்காமென்றவாறு.

இவைகளுள்,

கஞ்சத்தாற் செய்வது குடமுழவம்.
கருங்காலியாற் செய்வது இடக்கை.
செங்காலியாற் செய்வது சல்லி.
வேம்பாற் செய்வது மத்தளம்.
பலாவாற் செய்வது கரடிகை.
குரவாற் செய்வது பேரிகை.

(குராமரம்—குரவு)

சல்லி, இடக்கை ஒழிந்தனவெல்லாம் இவை ஒன்றும் பெருதகாலத்து மண்ணுற் செய்வது உத்தமம்.

இவையொழிய, இவற்றிற்கு வேருருமரம் பெருவெனக் கொள்க.

" எத்திற முழவு மித்திற மாமே " (அத்திறமாமே)

என்பதனுல் மற்றுமெல்லா முழவுகட்கும் இவையல்லது மரமில்லையெனக் கொள்க. ஏனையவற்றிற்கு, வரையறை இல்லையெனக் கொள்க. இனியிவற்றின் அளவுகளைச் சொல்லுதும். க.

100. ஏன்றநீ ளம்மாகி லெட்டோடு நாற்பதாம்
ஆன்றவிர லெட்டெட்டே சுற்றளவு — தோன்ற
முகவளவு பன்னிரண்டா மொய்குழ லாய்குண்டி
னகவளவு தான்பதினு ரும்.

என்னுதலிற்ருேவெனின்? பேரிகைக்குரிய அளவு உணர்த்திற்று. பேரிகைக்கு நீளம், விரல் நாற்பத்தெட்டு இதன் சுற்றளவு அறுபத்துநாலுவிரல், இதன் முகவளவு பன்னிரண்டு விரல். குண்டளவு பதினுறு விரலென்றவாறு. உ.

101. கையிற் பெருவிரலாற் காண வலக்குண்டு
மெய்பட்ட பிண்டிடமு மேலிரட்டி — வையார்
அயில்போலு முண்கண் ணுயிழை மாதே
இயல்பினுல் வார்த்துளைய மெட்டு. ஙு.

102. மத்தியங் குட்ட மதன்பெருமை யின்னளவு
பத்தினுட ஞறுவிரல் பைந்தொடியே — யுத்தமமாம்
ஆன்ரே லிருமுகமும் போர்த்து வளையிட்டுத்
தான்ரேலே யூட்டத் தகும்.

என்னுதலிற்ரேவெனின்? பேரிகைக்கு எய்திய சில இலக்கணமுணர்த்திற்று.

வலக்குண்டினளவு, பெருவிரல்.

இடக்குண்டினளவு, பெருவிரலிரட்டி.

வார்த்துளை யெட்டுக்கடிப்பு, நடுவிரலினுல் பருமையாய்ப் பதினறுவிரல் நீளமாகக் கொள்க.

உத்தமமான ஆவின்தோலை இரண்டு முகத்திலும் போர்த்து வலமுகத்திலே வளையிட்டுப் போர்த்துத் தோலின் வாராலேயெடுக்கை மரபென்றவாறு. ச

பேரிகை முற்றும்

103. அன்னம் படகத் தளவுநாற் பஃதாகும்
சொன்ன வதன்சுற் றறுபதாம் — மன்னு
முகவள வெண்விரலா மொய்குழலாய் குண்டின்
தகவள வீரைந்தாய்ச் சாற்று.

என்னுதலிற்ரேவெனின்? படகத்துக்குரிய அளவு உணர்த்திற்று.

படகத்துக்கு நீளம் நாற்பது விரல்.
அதன் சுற்றளவு அறுபது விரல்.
முகவளவு எண் விரல்.
குண்டினளவு பத்துவிரல் என்றவாறு.

இனிக் குண்டின் பருமையும் கடிப்பும் துளையும் தோலும் எல்லாம் பேரிகைக்குச் சொன்ன அளவுகளிலே கொள்கவென்றவாறு. ரு.

படகம் முற்றும்

104. நல்ல கரடிகைக்கு நாலெட்டா மங்குலியு
மெல்ல வதன்சுற்று நாற்பதாஞ் — சொல்லிய
குண்டளவு மீரேழாங் கோல முகத்தளவு
மெண்படியே யிராரு மெண். எனவும் சு.

பிண்டின் பருமை யணிவிரலாங் கோலளவு
பண்டுபதி னுரும் பருமை — கண்டி
சிறுவிரலாஞ் செய்தொழிற் கைகள்கம் பித்த
முறுநரம்பு மேயதுனே யெட்டு.

என்னுதலிற்றோவெனின்? கனக்கரடிகை இவ்வாறு கண்டுகொள்க என்றவாறு. எ.

கரடிகை முற்றும்.

## மத்தளவகை



105. பிண்டி யளவுவிரல் நாற்பதா மத்தளத்தின்
பண்டி யளவு பத்தெட்டாங் — குண்டளவு
சொன்ன விருபதாஞ் சொல்லின் முகத்தளவு
மன்னுபதி னெட்டாகும் வைப்பு.

என்னுதலிற்றோவெனின்? மத்தளத்திற்குரிய அளவு உணர்த்திற்று.

மத்தளத்திற்கு நீளம் நாற்பதுவிரல்.
சுற்றளவு விரல் எண்பது.
குண்டினளவு விரல் இருபது.
முகவளவு விரல் பதினெட்டு என்றவாறு. அ.

106. வளையின் பருமை சிறுவிரலாம் வாரின்
றுளையும் பதினாருஞ் சொல்லின் — வினையும்
வலமுகமும் பத்துவிரல் மற்றை முகமாறு
நிலவுதொடிக் கைபிறக்கை நேர்.

என்னுதலிற்றோவெனின்? மத்தளத்திற்குக் குண்டின் பருமை சிறுவிரல், வார்த்துளை பதினாறு என்பதுணர்த்திற்று.

வலமுக மாச்சினைக் களவு பத்துவிரல்.

இடமுக மாச்சினைக் களவு ஆறுவிரல்.

இதற்குத் தொடிக்கையும் பிறக்கையுமெனக் கொள்க என்றவாறு. ௬.

மத்தளவகை முற்றும்

## சல்லிவகை

107. நாற்ப தறுபத்தெட் டாறுமேற் பன்னிரண்டு
மார்த்த விரநாலு பத்தென்றூர் — சீர்ச்சல்லி
நீள முயர முகங்குண் டதன்பெருமை (பருமை)
வாள்விழியாய் வார்த்துளையு மெண்.

என்னுதலிற்றோவெனின்? சல்லிகைக்குரிய அளவு உணர்த்திற்று. சல்லிகைக்கு நீளம் விரல் நாற்பது

உயரம் அறுபத்தெட்டு விரல்.
முகம் ஆறுவிரல்.
குண்டளவு பன்னிரண்டு விரல்.
குண்டின் பருமை நால்விரல்.

வார்த்துளை பத்தென்றவாறு. நிரநிறை காண்க. ௰.

108. வன்றோல் வலமுகமா மென்றோ லிடமுகமாங்
கந்த வலமுகத்தைக் கோசமா — மந்த
இடமுகத்தை வாரான மாகமேற் கட்டி
யடர்முகத்தி லாருணி யாம்.

என்னுதலிற்றோவெனின்? சல்லிக்கு வலமுகத்தை வன்றோலாகப் போர்த்து. இடமுகத்தை மென்றோலாகப் போர்த்து வலமுகத்தைக் கொச்சகமாகவும் இடமுகத்தை வராளமாகவும் கட்டி அதனில் ஆருணி தைத்து அதனிலோடுகை மரபென்றவாறு என்பது உணர்த்திற்று ௰௧.

சல்லிகை முற்றும்

இனி, இடக்கையின் பகுதி வருமாறு,

109. நீள முகஞ்சுற்றுக் குண்டு முகத்தோடு
பாளப் பருமை துளேயென்றூர் — நீளம்
பதினு றதனிரட்டி பத்தாறு பத்தின்
மதமெனமூன் றுருமா வஞ்சி.

என்னுதலிற்றேவெனின்? இடக்கைக்குரிய அளவு உணர்த்திற்று. இடக்கைக்கு

க. நீளம்
உ. முகம்
ங. சுற்றுக்குண்டு
ச. முகக்கொண்டின் (குண்டின்) பருமை

இவற்றில் (ன்) நீளம் பதினுறுவிரல்.

முகம் முப்பத்திரண்டு
சுற்றுக்குண்டு பதினுறு
முகம் பத்துக் குண்டின் பருமை

துளே மூன்றுருமென நிரநிறையாகக் கொள்க என்றவாறு. (வார்த்துளே, பதினெட்டு)

ஆவஞ்சியென்பது இடக்கையின் பரியாயப் பெயர். ௰உ.

110. முகமிரண்டு மென்றேலான் மூடி வலமால்
நிகரி லிடம்பிறையால் நின்று — தகவே
யிரண்டு முகமயிர் வீக்கியெண் கோது
திரண்ட விருபுறமுஞ் சேர்.

என்னுதலிற்றேவெனின்? இடக்கைக்கு இரண்டு முகமும் மென்றேலாற்போர்த்தப்படும். பிறைக்கையாக நின்று தகவீக்கி என்றவாறு, ஓரோர் கயிறும் மூன்று புரியிலே திரித்திப்படி நாலுகயிறிட்டு ஒரு முகத்திலே, இரண்டிரண்டு வயிரிட்டொடுக்க என்றவாறு என்பது உணர்த்திற்று. ௰ங.

( வயிர் — மயிர் )

111. கார்மேதிக் கொம்பாற் குடுப்பா மதன்பெருமை
யோர்ந்தே குருளின் பருமையாம் — பாரோது
மெண்ணிரண்டு நீள மிதனுக்கென் றேமொழிந்தார்
மண்முழுதும் நாலோர்தம் வாக்கு.

என்னுதலிற்றோவெனின்? இடக்கைக் குடுப்புக் கொள்ளுமிடத்து எருமைக் கொம்பாலே தேருருளின் பருமையிலே பதினாறுவிரல் நீளத்திலே, கொள்கை எல்லா நூலினுள்ளும் விளங்கும், என்றவாறு என்பது உணர்த்திற்று. ௰௪.

( தேருள் — தெருள் வேறுபாடம். )

( தேருளின் பருமையிலே என்பன )

112. கொன்றை குருக்கத்தி வேம்புபுளி நன்றென்னச்
சொன்னார்கண் மேலோர்கண் டுன்றுங் — கரிய
விரும்பு மிதற்குரித் தென்றார் பெரிய
முழவு வளைவாயின் பேர்.

என்னுதலிற்றோவெனின்? முழவுக்கு வளையம் கொள்ளும் மரங்களை உணர்த்திற்று. இரும்பு கொண்டு வளையங்கொள்வதாம் … … … … … … … … …
… … … … … …. … … … … … … … … … ௰௫.

113. கன்னி யிளம்பசுவின் காயாப் புறந்தோலாம்
பின்னு மதனு ளுரிதகையாம் — பன்னிய
பக்கத்தோல் வார்கொள்ளப் பார்க்கி லதன்கொம்பு
மிக்க குடுப்பாகு மென்.

என்னுதலிற்றோவெனின்? முழவுகளுக்குத் தோல் கொள்ளுமாறுணர்த்திற்று. ஈனுத நாகான வயதிலே சூடு படாதே செத்த பசுவின் தோலைச் சீவியேறிடுவது. இது வன்மை முழவினுக்கு.

இதன் உதரத்தைப் போர்த்துக் கிடந்த தோலே வாங்கி மென்முழவுக்குப் போர்த்தப்படும். இதன் பக்கத்துத் தோலே வாராகக் கொள்க வென்றவாறு.

கொம்பாலே குடுப்புக் கொள்கவென்றவாறு. இனிப் பல முழவங்களுக்கும் பெருநூல் வந்தவழிக் கண்டு கொள்க. ௧௬.

(காமப்புறந்தோல்)

(உத்தரிகை) (வேறுபாடம்)

பிண்டமரபு முற்றும்
குரு வாழ்க
சிவாசலபதி சகாயம்

---

78. வாளோ ரெடுத்த நாளணி முழவமும்,
வேந்தன் சிறப்புடையராய் வாளோரெடுத்த முழவு
வீரர்க்கு அரசன் வரிசையாகக் கொடுத்த முழவு
மத்தளக் கருவியின் பின்வழியே குடமுழா நின்றது.
முழவொடு கூடி நின்று வாச்சியக் கூறுகளே அமைத்தது.
ஆமந்திரிகை என்னுங்கருவி. ஆமந்திரிகை–இடக்கை.
கிணை–தடாரி–புட்பறை.
மார்ச்சனையையுடைய திரண்ட முழவு.
(சிலம்பு உரை)

## வாச்சிய மரபு — ௧௫

(உட்பிரிவு)

## ★ எழுத்து மரபு



114. திருநெடுமாலைப் பணிந்து செப்புவேன் செப்ப
வருசவுத ரத்னு வலிதான் — கருது
நடனூல் நெறியுணர்ந்த நாவலோ ராராய்ந்த
வடநூல் நெறியே வகுத்து. ௧.

115. முந்திப் பரதன் முதலோர் மொழி வடநூற்
பந்திச் செழுஞ்சவுதப் பத்தினைப் — புந்தியுறத்
தண்டமிழாற் பாடத் தருவாய் பெருவாக்கு
வண்டுளபத் தார்மா தவா. ௨.

116. அகரமுதல் ஔகார மிருய வாரா
நிகரிலா வன்மெல் லினமும் — பகரு
மிடையினத்தில் ரவ்வும் எழிற்புள்ளி கூட
வடிவுடைய வாச்சியத்திற் காம்.

என்னுதலிற்றோவெனின்? வாச்சியத்திற்குரித்தாகிய பாட எழுத்துக்களை உணர்த்திற்று.

---

79. எழுத்து, முழவு வாச்சியங்களில் பாடஎழுத்தாக வாசித்தற்குரிய எழுத்துக்கள்.

(சவுதாரத்னுவலி—சவுதாரத்னுகரம்)

(சவுதப்பத்து—சவுதம்பற்றிய பத்துச் செய்யுட்களையுடைய நூல்.)

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும் வரப்பெருவெனக் கொள்க. என்னுதலிற்ரேவெனின் ?

"வருக்கங் கோட்டிற் குமுயிர் வாரா"

என்ருராகலின் வல்லினமாகிய க ச ட த ப ற வும், மெல்லினமாகிய ங ஞ ண ந ம ன வும், இடையினத்தில் ர வ்வென்னுமெழுத்தும் புள்ளியாகிய ஆய்தமும் கூடப் பதிஞலெழுத்துங்கூட்டி வாச்சியங்களேப் புணர்க்கப்படும் என்றவாறு.

(வாச்சியங்களே—வாச்சியச் சொற்களே) ந.

117. குற்றெழுத்தும் நெட்டெழுத்து மொற்று மளபெடையும்
பற்றியவாய் தம்மென்னப் பல்விதத்தால் — உற்ற
விதிசே ரெழுத்தொழிந்த மேவாவாம் கூறியச்
சதிசேரும் வாச்சியமாய்ச் சாற்று.

என்னுதலிற்ரேவெனின் ? இவ்வாறு சொன்ன எழுத்துக்களொழிய நீக்கி உள்ளவெழுத்துக்கள் ஒற்ருயும் உயிராயும் வரப்பெருவென்றவாறு. ச.

118. ஆய்ந்த வழகம் அருங்காத் திரஞ்சிவிரே
டேந்து மடைசுகைநே ரேறென்று —பூந்தொடியாய்
பாடகத்தேதொக்கிவற்றின் பண்மொழிந்து மாறிவர
வாடற்கும் பாப்புணர்க்க லாம்.

என்னுதலிற்ரேவெனின்? முன்சொன்ன எழுத்துக்களாலே வாச்சியம் புணர்க்குமாறுணர்த்திற்று அவை புணர்க்குமிடத்து அறுவகையோசைகளாற் புணர்க்கப்படும்.

அறுவகையோசைகளாவன,

க. அழகம்

உ. காத்திரம்

ங. சிவிறுகை

ச. அடைசுகை

ரு. நேர்கை

சு. ஏறுகை என அறுவகையோசைகளையும், பிறப்பித்தவாறே பாடகத்தே தொக்கும் இவற்றின், பண்பொழிந்து (மொழிந்து) மாறிவரினும் வாச்சியங்கள் புணர்க்கலாமென்றவாறு. இனி முன்சொன்ன எழுத்துக்களாலே அறுவகையோசையும் பிறக்குமாறு கண்டுகொள்க. ரு.

119. நாலஞ்சேழ் பத்தரையி னுலெட் டிரண்டெழுத்தைத்
கோலஞ்செய் சக்கரத்தைக் கொண்டுறழ—மேலந்து
மென்றி னுடனேசை யூட்ட விதிற்பிறக்கும்
மன்ருடுங் கூத்தின் வகை.

என்னுதலிற்றோவெனின்? முன்சொன்ன அறுவகை ஓசைகளும் பிறக்குமாறுணர்த்திற்று.

நாலாஞ்சேழ் பத்தரையிலென்பது,

பத்து வரம்புகீறி அதன்மீது ஏழு வரம்பு கீறினல் நாலஞ்சாகிய ஒன்பதிற் (கு) றுறையும் பத்து நான்கு அறையாய், ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

நாலெட்டிரண்டெழுத்தையென்பது, முன்சொன்ன பதினலெழுத்தையும் என்றவாறு.

| அவை | ௪. | | ௮. | | ௨. | |
|---|---|---|---|---|---|---|
| | ௧ | க | ௧ | ட | ௧ | ர |
| | ௨ | ச | ௨ | ற | ௨ | ஃ |
| | ௩ | த | ௩ | ங | | |
| | ௪ | ப | ௪ | ஞ | | |
| | | | ௫ | ண | | |
| | | | ௬ | ந | | |
| | | | ௭ | ம | | |
| | | | ௮ | ன | | |

| | | | | |
|---|---|---|---|---|
| அவற்றில் | க | வில் | நான்கு | ௧ |
| | ச | ,, | இரண்டு | ௨ |
| | ட | ,, | நான்கு | ௩ |
| | த | ,, | பத்து | ௪ |
| | ப | ,, | இரண்டு | ௫ |
| | ற | ,, | ஐந்து | ௬ |
| | ங | ,, | மூன்று | ௭ |
| | ஞ | ,, | மூன்று | ௮ |
| | ண | ,, | இரண்டு | ௯ |
| | ந | ,, | நான்கு | ௰ |
| | ம | ,, | நான்கு | ௰௧ |
| | ன | ,, | நான்கு | ௰௨ |
| | ர | ,, | நான்கு | ௰௩ |
| | புள்ளியாகிய (ஃ) ஆய்தம் | | ஒன்று | ௰௪ |

ஆக பதினன்கு எழுத்துக்களே ஐம்பத்திரண்டு எழுத்துக்களாகக் கொள்ளப்பெறும்.

---

80. நாலஞ்சேழ் பத்தரை, என்பது. 4, 5, 7, 10 இவற்றைக் கூட்டினல் 26. இதனே அரையாகக் கொண்டால் இரு மடங்காக்கி ஒன்ருகக்காண இரண்டு இருபத்தியாறு (52) ஐம்பத்திரண்டு ஆதல் காண்க.

அவை வருமாறு :—

கவ்வினத்தில், க. கி. கு. கே.

சவ்வினத்தில், ச. செ.

டவ்வினத்தில், ட. டி. டு. டெ.

தவ்வினத்தில், த. தா. தி. தீ. து. தூ. தெ. தே. தொ. தோ.

பவ்வினத்தில், ப. பெ.

றவ்வினத்தில், ற. றி. று. றெ. றை.

ஙவ்வினத்தில், ங. ஙி. ஙொ.

ஞவ்வினத்தில், ஞ. ஞி. ஞொ.

ணவ்வினத்தில், ண. ணா.

நவ்வினத்தில், ந. நி. நு. நெ.

மவ்வினத்தில், ம. மி. மு. மெ.

னவ்வினத்தில், ன. னி. னு. னெ.

ரவ்வினத்தில், ர. ரா. ரி. ரு. என்கிற இவற்றோடே புள்ளியாகிய (ஃ) ஆய்தமும் கூட்டிப் பதினாலெழுத்தும் கண்டு ஐம்பத்திரண்டும் கண்டு கொள்க.

சக்கரத்துள்ளே வைத்த முறைமையானே நிறுத்தி உறழ ஆறோசையும் பிறக்கும். எவ்வாறு பிறக்குமோவெனில் ?

௰௨ ௨௮ ௰௨ ௨ என இவற்றுள் அழகம் பிறக்கும்.

௰௪ ௫௰ ௰௬ ௫௰ ௰௩ ௨ என இவற்றுள் காத்திரம் பிறக்கும்.

௨ ௨௰௪ ௨ ௨௰௪ ௨ ௨௰௪ ௮ என இவற்றுள் சிவிறுகை பிறக்கும்.

௰௨ ௧ ௰௨ ௧ ௰௪ ௧ என இவற்றுள் அடைசுகை பிறக்கும்.

உய்உ ய்ச க என இவற்றுள் நேர்கை பிறக்கும்.

உய் ஙஎ சங என இவற்றுள் ஏறுகை பிறக்கும்.

சல்லி இடக்கை இவற்றிற் பிறக்குமிடத்து டகார முதலாகப் பிறக்குமெனக் கொள்க. சூ.

120. தத்தித்தோ டெவ்வென்று சத்தம் பிறக்குமென
முத்தமிழோ ரெல்லா மொழிந்தார்கள் — எத்திறமுந்
தன்வழி யொன்றித் தனித்தனியே வாராவாம்
பின்னு மடைசொல்லாம் பேசு.

என்னுதலிற்றோவெனின்? முன்சொன்ன ஓசைகளாமாறும். அவை பல மொழி தழுவுமாறும் உணர்த்திற்று. அவை வருமாறு :—

தத்தித்தோடெவ்வென்று சத்தம் பிறக்கும் என்பது, தத் தித் தொ டெவ்வென்னும் இவற்றை முன்னாகக் கொண்டு சத்தம் பிறக்கும்.

அவை, தக்கிட திக்கிட
கிடதக கிடதிகி
தொங்கிட கிடதொம்
கிடதகி என

அழகம் இவ்வாறு வேற்றுமைப்படும்.

திர துர தர எனக் காத்திரம் வரும்.

கிற கிற கிறட என்பது சிவிறுகை.

தகதக திகிதிகி டகடக டிகிடிகி என்பது அடைசுகை.

தகத திகிதி டிடிடி என்பது நேர்கை

தொம், தொகும், நிகும் என்பன ஏறுகை.

அவை வருமாறு :—

தக்கி திக்கி யென முதலே தக்கெடுத்து இதிலே டவ்வேற்றித் தக்கிட திக்கிட என வைத்து இதன் மேலே கிடதகி என்று வைத்து தக்கிட திக்கிட கிடதகி என அழகம் இவ்வாறு கொடுத்துப் பாடம் படிக்கப்படும்.

ஏனையவும், திர துர தர எனவும், கிற கிறட எனவும்.

தக தகத தித்தி தித்திகிட கடதடகடிகி எனவும், தத்தத் தித்திதி டிடிடிடி எனவும் நஃ நஃ நஃ கிண நஃகி நஃகி எனவும் இவ்வாறு தொடர்ச்சிப்படும்.

அச்சுடன் சேர்த்தும் விகற்பமாக்கிப் பாடம் படிப்பிவிக்க அமையும்.

இனி இப்பாடங்கள் விரவி வருமாறு :—

அழகம் தக்கிட கிடதகி

௧. தக்கிட கிடதகி திர துர தர என முன்னே அழகமும் பின்னே காத்திரமும் கூடி வந்தது.

௨. தக்கிட கிடதகி கிற கிற கிறட என முன்னே அழகமும் பின்னே சிவிறுகையும் கூடி வந்தது.

௩. தக்கிட கிடதகி தகதக திகிதிகி டகடக டிகிடிகி என முன்னே அழகமும் பின்னே அடைசுகையும் கூடி வந்தது.

௪. தக்கிடக் கிடதகித் தகத திகிதி டிடிடி என முன்னே அழகமும், பின்னே நேர்கையும் கூடிவந்தது.

௫. தக்கிடக் கிடதகித் தொம் தொகும் நிகும் என முன்னே அழகமும் பின்னே ஏறுகையும் கூடிவந்தது.

௬. திர துர தர தக்கிட கிடதகி என முன்னே காத்திரமும், பின்னே அழகமும் கூடிவந்தது.

எ. கிற கிற கிறட தக்கிட கிடதகி என முன்னே சிவிறுகையும் பின்னே அழகமும் கூடிவந்தது.

அ. தகதக திகிதிகி டகடக டிகிடிகி தக்கிட கிடதகி என முன்னே அடைசுகையும் பின்னே அழகமும் கூடி வந்தது.

கூ. தகத திகிதி டிடிடி தக்கிட கிடதகி என முன்னே நேர்கையும் பின்னே அழகமும் கூடிவந்தது.

ம. தொம் தொகும் நிகும் தக்கிட கிடதகி என முன்னே ஏறுகையும் பின்னே அழகமும் கூடிவந்தது.

இவ்வாறு முன்னும் பின்னுமாய் வருவன, முதலும் இடையும் கடையுமாயும் வருமுறைமை கண்டு கொள்க.

அழகம், தக்கிட கிடதக துக்கிட
தொங்கிட கிடதகி தக்கிட

என வேற்றுமைப்படுவது போன்று

திர துர தர என்ற காத்திரம் தக தக தக
திக திக திக
துகு துகு துகு

எனவும் பிறவுமாய் வேற்றுமைப்படும்.

தகத திகிதி டிடிடி என்ற நேர்கை, தகக
தகத
திகிகி
திகிதி
டிடிடி
திதிதி

எனவும் வேற்றுமைப்படும்.

பிறவும் வரும் வழிக்கண்டு கொள்க.

இனி, "தங்கிண தாங்கிண திங்கிணத் தாங்தோம்
தகதகதிகி தொகத் தகுதி திககு
தகத தக்கிட கிடதகி திர துர தர
தக்கிடத் ததிகிற செகிணுத" எனப் பல

ஓசையுடனுங் கொடுத்து வந்த அச்சுப்பாடங்கள் கண்டு கொள்க.

'தாளஞ் செம்படை' இவ்வாறு தாளம் வேண்டின தாளங்களாலே பலவோசைகளாலே விரவிக் கோர்வை கோர்த்துப் பாடப்படும். எ.

121. ஒத்துக் கவுத்துவமே யொண்டாள வாச்சியமே
பத்துப் பயில்கின்ற வாச்சியமே — முத்தமிழோர்
பாங்கான வோசையும் பற்று மெனவுரைத்தார்
பூங்கா வகத்தியனுர் போந்து.

என்னுதலிற்றோவெனின்? வாச்சியப்பாக்களை உணர்த்திற்று.

வாச்சியப்பாக்கள் வருமாறு:— (வரலாறு)

அவை க. ஒத்து
உ. கவுத்துவம்
ங. தாளம்
ச. வாச்சியம்
ரு. ஓசை
சா. பற்று எனக் கூறப்பெறும்.

இவற்றுள்;

க. ஒத்து வருமாறு, (வரலாறு)

க. தேசி உ. வடுகு ங. சிங்களம்.

என்னும் மூன்று கூத்திற்கும் உரித்தாகியவோசை ஒத்து எனப்படும்.

உ. கவுத்துவமாவது, பலதாளங்களிலே கட்டுண்டு அந்தத் தாளத்தோசையாலே, பெயர் பெற்று அடிகளெல்லாம் தம்மிலொத்த பல கருவிகளது கால வேற்றுமை, காலந்தோறும் புகக்கோர்த்ததே அவற்றின் திரிபு, காலத்து வேற்றுமைப்படாத உலகங்களைப் பற்ருகிட்டு விளக்கிஞற்போல ஒழிந்த கருவிகளுங்கூட நின்றிசைத்துத் தீர்வது. (பற்ருசிட்டு)

ங. தாளமாவது, வடசொல் விரவி நாலடியாய் முப்பத்து இரண்டு அறிவர்த்தனைகளாலே முற்றவருவது.

ச வாச்சியமாவது, முன்சொன்னவாறு சத்தத்தையும் தொடுத்துத் தமிழுரையாய் ஒரு கருவியாய்த் தொடராதே பல கூறுகளையுமுடைத்தாய் நாலடியாலே எட்டுப் பரிவர்த்தனை பெற்றுச் சந்தியும் தாளமும் பொருந்தப் புணர்ப்பது.

ரு. ஓசையாவது, ஒலியளவுடைத்தாய், அளபெடை ஏழு முதலெடுத்திரண்டடியாய்ப் புணர்ப்பது.

சூ. பற்ருவது, இதற்குப் பொருந்த இரண்டடியாக்கிக் காலத்தைப்பற்றி வேற்றுமை தோன்றப் புணர்ப்பது. இப்பாக்கள் ஆசான் கண்ணகத்தொற்றியறிந்து கண்டு கொள்க. அ

122. வைத்த மலைப்பு முரிப்புத் துடுக்கமுடன்
இத்த குளந்தரிபோ டிந்நான்கு — மைத்தடங்கண்
மாதே வழுவாமல் வாச்சியத்தைக் கொண்டியற்றி
லிதேயிக் கூத்துக் கியல்பு.

என்னுதலிற்ருேவெனின்? வாச்சியப் பகுதிகள் வருமாறுணர்த்திற்று.

அவை க. மலைப்பு
உ. முரிப்பு
ங. துடுக்கம்
ச. அந்தரி எனவிவை ... ... ... ...

இவற்றுள் மலைப்பாவது,

அடிகள் முறிவது, முறித்துப்பாடினது, தாளக் கிரியைபற்றி மண்டிலமாக வருவது.

முரிப்பாவது,

ஒரு வரித்தடையினை அளவிற் செய்கையாலே முரிப்பது.

துடுக்கமாவது,

வேறுபட்ட இரண்டடியாய் முதலடி வாரத்தைப்பற்றி நிகழ்ந்து பின்பிலடித்திரளைப்பற்றி நிகழ்வது.

அந்தரியாவது,

ஓரடியையே மூன்று காலமும் பற்றிப் பாடியும் இதனையிரட்டித்தும் இந்தக் காலங்களிலே பாடியும் முடிப்பது.

"அந்தரி யடுக்க மலைப்பு முரிப்பு"

என்றாராகலின், (துடுக்க) (வேறுபாடம்)

"முரிப்புத் துடுக்க மந்தரியும் கீதாங்கம் ஒத்து,
மலைப்புங் கவுத்துவமும் நிருத்த மலைப்பு மந்தரியுமே
ஒரோ வகையாலு பயமாம்"

முதலும் இடையும் கடையுமெல்லாம் மூன்று வகைப்படும்.

முதலாவது தகாரங்கொள்ளுதல்.

இடையாவது இடைகொள்ளுதல்.

கடைக்கொட்டு — என்னை ?

"ஆதிக் கொட்டுத் தகார மாகும்"
"காவி குதியிடை வருமென"
அந்தம் வருமோ "கண்டனை யென்ப —
துருவமாகும்"

என்றாராகலின் இவ்வாறு கண்டு கொள்க. கூ

எழுத்துமரபு முற்றும்
வாச்சியமரபு முற்றும்
குரு வாழ்க
சிவாசலபதி சகாயம்.

வெண்பாத்தொகை 122

பஞ்சமரபு முதற்றெகுதி
முற்றும்.

# அரும்பதப் பொருள்

## அகர நிரல்.

"அ"

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 4, 35, 120 | அகம் | பண்களின் முதலமைப்பும் கூத்தின் முதலமைப்பும் |
| 60 | அகக்கூறு | பூதபரிணாமத்தால் உடம்பு ஆகுந்தன்மை |
| 7 | அகத்தியம் | அகத்தியர் செய்த முத்தமிழ்நூல் |
| 1 | அகத்தியச் சூத்திரம் | குவலாயாநந்தம் எனும் நூலின் மேற்கோளாகக் கூறப்பெறுவது |
| 72 | அகமாய் | ஒரு பண்ணுமிருக்க உருவண்ணம் தேவபாணி இவற்றுடன் பொருந்திய நிறமாய் வருவனவற்றுள் ஒன்று அதாவது பாடலின் வகை |
| 72, 120 | அகப்புறமாய்— | கவிகளுடனும் சிந்துகளுடனும் பொருந்தி வருவன. |
| 75 | அகநிலை | இயல்பாகவே அமைந்த இசைகளைத் தன்னகத்தே கொண்டு நிற்பது. கூத்திற்கும் முதல்வகை. |
| 128 | அகமுழவு | மத்தளம் சல்லி முதலியன உத்தமமான கருவிகள். |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 39, 48 | அக்காளம்— | அக்காழும், தத்தளம் தத்தள பஞ்சமம், ஆறிசைப்பண்களில் ஒன்று. |
| 64, 65 | அசவை— | முதலெழுத்து, உயிரெழுத்து. |
| 115, 116 | அசை— | யாழெழுத்தாற் புணர்க்கப் பெறுதல். |
| 66 | அச்சு— | குற்றெழுத்து அ, இ, உ, எ, ஒ. தாளத்துடனிகழும், காட்டாளத்தி சொற்கட்டுப் பாடம், வாச்சியச் சொற்களின் முறை. தங்கிண தாங்கிண ததிகிற செகிணுத எனவிவை. |
| 122 | அடக்கம்— | ஒருவகைப்பறை. |
| 123, 129 | அடக்கப்பறை | ஆணைப்பறை |
| | அடைசுகை— | தததக திகிதிகி டகடக எனும் சொற்கட்டுகள். |
| 75, 76 | அணிமாமரபு— | ஆராய்ந்து அறுதியிடுதல் |
| 55 | அணைசு— | குழற்கருவியின் அடிப்பாகத்தில் பொருத்துவதோர் உறுப்பு. வெங்கலத்தால் செய்யப் பெறுவது. குமுதவடிவாகச் செய்யப்பெறுவது. மரத்தாலும் செய்யப்பெறும். |
| 63, 76 | அண்ணம்— | அண்ணுக்கு, ஒலிதாக்கும் இடம். |
| 53, 134 | அதமம்— | மூன்றுந்தரம். |
| 4 | அதிரா— | வகைக்கூத்தின் அடைமொழி. |
| 28, 109 | அத்தராட்டம்— | திராடம், ஆறிசைப் பண்களில் ஒன்று. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 61 | அத்தி— | பத்து நாடிகளில் ஒன்று. |
| | அந்தரி | வாச்சியப் பகுதிகளில் ஒன்று ஓரடியையே மூன்று காலமும் பற்றிப் பாடியும் இதனை இரட்டித்தும் இந்தக் காலங்களில் பாடிமுடிப்பது. |
| 121, 129 | அந்தரி முழவு— | தோற்கருவிகளில் ஒன்று. |
| 28, 92 | அந்தாளி— | அந்தாழி, அந்தாளிக்குறிஞ்சி ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 27, 89 | அந்தாளிபாடை— | ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 30, 43 | அந்தி— | ஆந்தி, ஆறிசைப்பண்களில் ஒன்று. |
| 59 | அப்பு— | நீர், இதன் பரிணமம் மூனை. சுக்கிலம், நிணம், உதிரம். |
| 60 | அபாநன் | பத்து வாயுக்களில் ஒன்று. மல மூத்திரம் முதலியவற்றைக் கழிக்கும். |
| 129, 133 | அமுதகுண்டலி— | ஒருவகை முழவு |
| 33, 47 | அயிர்ப்பு— | அருத்திர பஞ்சமம் உருத்திர பஞ்சமம் ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 80, 82 | அரங்கம்— | இசையரங்கம், நாடகவரங்கம் முதலியன. |
| 38, 47 | அரந்தை— | ஆநந்தை, ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 89 | அரளி— | சாயை என்ற பண்ணின் பரியாயப் பெயர். |

| பக்க என்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 38 | அரற்று— | அரற்றுக் குறிஞ்சி முதிர்ந்த குறிஞ்சியுமாம் ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 4 | அரனரங்கத் தொகை— | ஒரு தமிழ் நூல். |
| 36, 89 | அராகம்— | தக்கராகம். ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 4 | அராளம்— | ஆடப்படும் ஆண் கோலங்களில் ஒன்று. |
| 35 | அரி— | மவுரி, பவுரி, அரியநாட்டம் மாங்கள்ளி, ஏழிசைப்பண். சிம்மராசி |
| 35 | அருகு— | அருகியல். ஒரு பண்ணின் முற்பகுதிக்குரிய இயல்பு. |
| 38, 47 | அருட்புரி— | மாளுவகிரி, ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 24, 42 | அரும்பாலை— | பாலையாழ் ஏழ்பெரும் பாலைகளில் ஒன்று. |
| 82 | அருவியோசை— | பாடுகின்ற தொழின் முறைமைகளில் ஒன்று. |
| 21, 83 | அலகு— | சுருதி, மாத்திரை குற்றப்படாத ஓசை. |
| 5 | அல்லியம்— | கூத்தின் வகைகளில் ஒன்று நின்றுடல் வகையில் ஒன்று அஞ்சனவண்ணன் ஆடிய ஆடல். |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
| --- | --- | --- |
| 7 | அவிநயம்— | விணயம், கைகாட்டி வல்லம்பம் செய்தல். |
| | அழகம் | தக்கிட, திக்கிட என்ற சொற்கட்டு. கிடதக, தொங்கிட என வேற்றுமைப் படுவது. |
| 32, 89 | அழுங்கு— | ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 8 | அறம்— | நாட்டியச் செயலின் பயன். |
| 77 | அறிவு— | பாடலாசிரியனே ஒத்த அறிவு. |
| 8 | அறிவனுர் | இப்பஞ்சமரபு நூலாசிரியர். |
| | அறிவர்த்தனே | தாள வகைகளில் வடசொல் விரவி நாலடி ஆகி முப்பத்திரண்டாக வருவது. |
| 13 | அறுவகையுறுப்பு | செங்கோட்டியாழிற்கு உரிய, கோடு. திவவு ஆணி, பத்தல், தந்திரிகரம் நரம்பு என ஙிவை. |
| 121 | அளவு— | முழவுகளின் அளவு வகை. |
| 21, 58 | அன்னம்— | ஒருவகைப் நீர்வாழ் பறவை இதன் ஒலி விளரி இசையை ஒத்தது. அன்னமயமாகிய சுக்கில சுரோணிதம். |
| 136 | அன்னம்படகம் | படகம் என்ற தோற்கருவி. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| | "ஆ" | |
| 22, 23 | ஆ | முதலிசையின் உயிர்க்குறியிட்டெழுத்து. |
| 73 | ஆசாச கம்பிதம் | சாளவம் ஏந்திசையாகப்பாடுவது. |
| 57, 60 | ஆகாயம்— | வான், உருவமனறு, ஒரு குணமுடைத்து, செவியாயும் செவியோசையாயும், திகழ்வது, பரிணுமத்தில் ஒன்று. இதன் கூறு. வெகுளி, மதம், மானம் ஆங்காரம், உலோபம். |
| 43, 35 | ஆகிரி— | ஆகரி, யாசரி, யாசாரி ஏழிசைப் பண்களில் ஒன்று. |
| 36, 50 | ஆசான்— | காந்தாரம், தாரப்பாண்டிறம் ஐந்திசைப் பண்களில் ஒன்று. |
| 82 | ஆடுவாராடும் அரங்கம்— | ஆடுகின்றவர் ஆடும் அரங்கம் |
| 22 | ஆண் | சில இசைகளை ஆண் என்பது வழக்கு. அவை தாரமும் குரலும் கைக்கிளையுமாம். |
| 11 | ஆணி— | யாழ்க்கருவியிலமைந்த ஆணி. |
| 64 | ஆதாரம்— | மூலாதாரம், ஆ, எனும் குறியிட்டு எழுத்தினையுடைய தாரம், ஆதாரம். |
| 71 | ஆதி— | முதல், சுத்தம், பூருவம் கேத்திராங்கம் இது சுத்தத்துடனே சிவனும், |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 122 | ஆதிக்கருவிகள்— | முப்பது வகையான தோற்கருவிகள். |
| 119 | ஆதியாய்— | முதன்மையாய், ஆதியாய் நின்று தொழிற்படுகின்ற முழவு. |
| 153 | ஆதிக்கொட்டு— | கருவிக்குரிய, கொட்டுச் சொல்லாகத் தகாரத்தையே முதலிற் கொள்ளப் பெறுதல். |
| 11 | ஆதியாழ்— | முதன்மையான யாழ் ஆயிரப் பேரியாழ் எனவும் பெயர் பெறும். |
| 30, 90 | ஆநந்தை— | அரந்தை, ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 30, 89 | ஆந்தி— | அந்தி என்ற பண்ணின் பரியாயப்பெயர். ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 113 | ஆந்திரியம்— | நாலாமடி. பாடல்களின் அடிமுறைமை. |
| 113 | ஆபோகம்— | ஆயோகம், ஆலோகம், நாலுறுப்புக்களும் குறைபாடு இல்லாத உருக்கள் அதாவது பாடல்கள். |
| 117 | ஆம்பல்வண்ணம்- | எழுவாய் வடித்த முட்டொடர்பு பட்டு முதலடி மண்டிலம் கொண்டு வரப்புணப்பது வண்ணப் பாடல்களில் ஒருவகை. |
| 18 | ஆயம்— | இசைத் தொகுதிக் கூட்டம் இசைத் தொகுதிகளின் நான்கு வகைகளில் ஒன்று. |

| பக்க என்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 16 | ஆயமிரேழரை— | சதுரம். அதாவது ஆயம் ஈரேழரை கொள்ளச் சதுரம். |
| 21 | ஆயப்பாலை— | பதினாற்கோவை. அதாவது பதினான்கு நரம்புகள் கட்டும் முறைமை. |
| 11 | ஆயிரம்— | ஆயிரம் நரம்புகளைக் கொண்ட ஆதியாழ். |
| 10 | ஆரியப்பதம்— | ஆரியச்சொல். ஆரியச் சொற்களால் சில தமிழ்ப் பண்களின் பெயர் முறை கூறல். சில கருவிகளையும் கூறப்பெறுவது. ஆரியப் பதங்கொள் நாரதப் பேரியாழ். |
| 33, 49 | ஆரியவேளர்கொல்லி— | ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 33, 48 | ஆரியக்குச்சரி— | ஆறிசைப் பண்களில் ஒன்று. |
| 130, 139 | ஆவஞ்சி— | ஒரு தோற்கருவி இடக்கையின் பரியாயப்பெயர் குடுக்கை எனினும் ஒக்கும் இதற்குத் தெய்வம் உருத்திரன். |
| 65, 66 | ஆளத்தி— | ஆலாபனம், ஆலாபம் தென்னாவென்றும், தெனாவென்றும், தென்னாதெனாவென்றும் பாடப்பெறும். இதற்குத் தவ்வினம், நவ்வினம், மவ்வினம் இம்மூன்று எழுத்தினம் மட்டுமே வரும் மற்றயவை வரப்பெரு. இது நீளத்தால் எட்டும் நிதானத்தால் நின்றியங்கும். |
| 22 | ஆரும் நரம்பு— | பகை நரம்பு. நின்ற நரம்புக்கு ஆரும்நரம்பு. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
| --- | --- | --- |
| 90, 100 | ஆருஞ் சாமத்துப் பண்— | கவ்வாணம், பின்னபஞ்சமம், மேகாஞ்சி மருள் வியாழக்குறிஞ்சி செந்து, அந்தி, முதிர்ந்த இந்தளம் என்ற எட்டுபண்கள். இவை சூரியனைப் பாடப்படும் பண்கள். |
| 151 | ஆறுசத்தம்— | அறுவகையோசை, அவை அழகம், காத்திரம், சிவிறுகை, அடைசுகை, நேர்கை, ஏறுகை எனப்படும். தோற்கருவி ஓசைகளே இவை. கொட்டோசைகள். |
| 32 | ஆறுநரம்பின்— | ஆறுநரம்பினை முதல் எடுத்தல் வகை, சாடவம். |
| 3 | ஆனந்தத் தாண்டவம்— | ஆடவல்லானுருவில், இறைவன் ஆடும் தாண்டவம். |
| 136 | ஆன்றோல்— | ஆவின் (பசுவின் தோல்) தோல் பேரிகைஎன்னும் தோற்கருவிக்கு போர்த்தப்படும் தோல். |

"இ"

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
| --- | --- | --- |
| 75 | இசை— | பாவாற் பெயற்பெற்றதும். |
| 70, 76 | இசை— | ஆகுபெயரான் மிடற்றுப் (கண்டத்திற் பிறக்கும்) பாடற்காயிற்று. பல இயற்பாக்களுடன் நிறத்தை இசைத்தலால் இசை. |
| 53 | இசைக்குழல்— | வங்கியம், இசை. குழற்கருவி வகைகள். |
| 57 | இசைக்குப் பிறப்பிடம்— | ஆகாயம். |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 105 | இசைக்குரியவன்– | குழலன், மதங்கன். (பாணன்) கவுண்டியன் இசை பாணுக்குரித்தாதல் (பாட்டிற்கு) |
| 34, 96 | இந்தளம்— | நளுத்தை. ஐந்திசைப்பண்களில் ஒன்று. |
| 83 | இசைத்திரட்சி— | வருணை, தேசாளசுத்தக் கிரியைகளில் ஒன்று. |
| 62, 63 | இசை நுணுக்கம்– | பழங்காலத்திய இசைத் தமிழ் நூல்களில் ஒன்று. |
| 79 | இசை நுளைபு — | நெய்தல், முகத்தல், பாய்தல், நுளைதல் என நான்கு. |
| 115 | இசை புணர்க்குமிடம்— | எழுத்து, அசை, சீர், தளை என நான்கு. |
| 77 | இசைப்புணர்ப்பு– | இடையிடு, தொட்டுக்கோள் வேறுபாடு, இரட்டை, கூட்டிசை என ஐந்து. |
| 104 | இசை புணர்க்க— | முதலெழுத்தறிந்து புணர்க்கும் முறை. |
| 21 | இசைப்புலவோர்– | இசைத்தமிழ் வல்லோர். |
| 3, 9 | இசை மரபு— | இந்நூலின் ( பஞ்சமரபு ) முதல் மரபு. |
| 64 | இசையும் முத்திக்குத்துணையே— | முத்திக்குவித்தாமுடம்பு. |
| 112 | இசையிசைப்பா– | இசையும், இசைப்பாவும் இசை நுணுக்கம் கூறியது. |
| 15 | இசையெழு முறைமை— | விளையாட்டு எனுந்தொழில் முறைமை யாழின் நரம்புகளை ஆராயும் முறைமை. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 73 | இசைவகைப் பகுதி— | வீணையாற் காணப்பெறுவது வினையால், தொழிலால் காணப்பெறுவது. |
| 121, 131 | இடக்கை— | ஆவஞ்சி என்ற தோற்கருவியுமாம் |
| 55 | இடது முகம்— | குழலின் இடப்பாகம் அடிப்பாகம். |
| 138 | இட முகமாச்சினை— | மத்தளத்தின் இடமுகவமைப்பு. |
| 18, 20 | இடபம்— | பன்னிரண்டு இராசிகளில்ஒன்று இளிநரம்பு நிறுத்துமிடம். |
| 106 | இடைவண்ணம்- | வண்ண வகைகளில் ஒன்று இருபத்தொன்றாய் வரும். |
| 120 | இடை— | தோற்கருவிகளின் முறைமை பதினேழில் இதுவுமொன்று. |
| 122, 126 | இடை— | இடைக்கருவி எழுவகை முறைமைகளில் ஒன்று. |
| 127 | இடைக்கருவி— | சல்லி என்ற தோற்கருவி. |
| 133 | இடைக்கருவிகள் பன்னிரண்டு— | இவை வயிரவன், முருகன், துர்க்கை, இம் மூவர்க்கும் இயற்றப்படுவன. (வாசிக்கப்படுவன) |
| 77 | இடையிடு— | இசைப்புணர்வு வகையில் ஒன்று |
| 63 | இமைப்பு— | கூர்மனது செயல் |
| 124 | இயல்புரைத்தவன்— | தோற்கருவிகளின் இயல்புரைத்தவன் நந்தி என்பது கூத்தநூல். |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 54 | இயங்காமல்— | குழல் செய்யப்படும் மரம் நாலுகாற்றும் இயங்காமல். |
| 3 | இயலுமிசையும்— | நாடகங்களையும் தழுவி வருவது. |
| 2 | இரங்கியமூவிசை- | எழுத்து முதற்சீர்களாற் சேர்க்கப்படுவது. |
| 5 | இரண்டுவகைத் தாளம்— | தமிழ்த்தாளம், வடதாளம். |
| 13 | இரட்டித்த குரலாய்— | முதலும் இறுதியும் குரல்நரம்பு வர அமைத்தல். |
| 14 | இரண்டோடிரண்டு— | நரம்பு, நரம்புகளை நான்காம் நரம்பு முறையில் அதாவது நட்பு முறையில் உறழ்தல். |
| 97 | இரண்டாஞ்சாமத்துப்பண்— | திருமாலைப் பாடப்படும் பண். நிருபதுங்கராகம், நட்டராகம் பஞ்சுரம், தாளி,- பழந்தக்கராகம், சாதாளி, காமரம், செம்பாலை என்ற எட்டுப்பண்கள். |
| 118 | இராகமறிதல்— | இசை புணர்க்குமிடத்து இதனையுமறிந்துகொள்ள வேண்டுமென்பது. |
| 84 | இராமேச்சுரவேர்- | இம்பூறல் ஒருவகை வேர். இசைப்புலவர் குரல் வளத்திற்காகப் பயன்படுத்தும் வேர் வகை. |
| 88, 92 | இருவயனம்— | ஆரியம், தமிழ்ப்பெயர் நெறிக்குறியன. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 4, 5 | இருவகைக் கூத்து— | மார்க்கம், தேசிகம், அகம், புறம் நின்ருடல், வீழ்ந்தாடல். |
| 10, 119 | இலக்கணம்— | யாழின் இலக்கணம் தோற்கருவியின் இலக்கணம். |
| 18 | இளி— | ஏழிசைகளில் ஒன்று. பட்டடை பெண்ணிசை. நெஞ்சிற் பிறப்பது. இடபராசியில் நிறுத்தும் இசை. அங்காரகனுக்குரிய இசை. |
| 19 | இளி குரலாயது- | குரற்கிரமத்து எதிர் நிர நிறையிலும் அமையும் அமைப்பு, வலமுறைப் பாலையிலும் அமையும் அமைப்பு. |
| 29, 42 | இறுநிறம்— | மண்டலியாழ் ஏழிசைப் பண்களில் ஒன்று. |
| 106 | இன்னிசையின்பா— | சிந்து, திரிபாதம் சவலை சமபாதம் செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணம் என விவை. |

"ஈ"

| | | |
|---|---|---|
| 67 | ஈ— | இரண்டாம் இசைக்குரிய உயிர்க் குறியீட்டு எழுத்து. |
| 4 | ஈழம்— | ஒருவகை கூத்து பலகோலமாக ஆடப்படும் ஆண் கோலங்களில் ஒன்று. |
| 16 | ஈரேழுக் கோரேழு— | ஆயப்பாலை முறை நரம்புகளை ஒருவகைப்படுத்தியறிந்து நிறுத்தும் முறை. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| | **"உ"** | |
| 66 | உ— | ஆளத்திக்குரிய குற்றெழுத்தில் ஒன்று. |
| 114 | உகம்— | இசைப்பா வகைகளில் பாடலின் முதலடி. |
| 111, 113 | உக்கிரம் உக்கிரகம்— | உக்கிரசம் ஒரு இசைப்பாட்டின் முதல் அடியும், நாலுறுப்புக்களும் குறைபாடில்லாத உருவென நிற்பது. |
| 65 | உச்சரித்து— | நாதத்தை உச்சரிக்கும் மரபு. |
| 100 | உச்சிக்கிழான்— | சூரியன் |
| | கோட்டம்— | அவனது கோயில் |
| 58, 61 | உடம்பு— | புற்கலம், மண் உடம்பாயும் முத்திக்குவித்தாம் உடப்பு என்பது. |
| 85, 129 | உடுக்கை— | ஒரு தோற்கருவி புற முழவுகளில் ஒன்று மென்மைக் கருவிகளில் ஒன்று. இடைக்கருவிகளிலும் ஒன்று. |
| 131, 132 | உதயம்— | சூரியன். தோற்கருவி முறைமைகளில் சூரியாங்கம். |
| 141 | உதரத்தைப் போர்த்துக்கிடந்ததோல்— | மென்முழவுக்குப் போர்த்தப்படும் தோல். |
| 25, 45 | உதயகிரி— | உதையகிரி ஆறிசைப் பண்களில் ஒன்று. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 60, 63 | உதானன்— | பத்து வாயுக்களில் ஒன்று மூலாதாரத்தினின்று நால்விரல் விட்டு நாபியாதாரமாக எழுந்து நெஞ்சு, தலை, கண்டம், மூக்கு என்னும் இவற்றின் இடங்களில் பொருந்திய வகையானும் பல், நா அண்ணம் இதழ் என்னும் உறுப்பினை உடைய முயற்சி வகையானும் எழுத்துக்களைப் புலப்படுத்துவது. |
| 54, 134, 134 | உத்தமம்— | மூங்கிலாற் செய்யப்பெறும் குழற்கருவி. |
| 80 | உத்தம ஓசை— | குயில் கூவல், வண்டின முரற்சி, வலம்புரியோசை. |
| 126 | உத்தமமான கருவிகள்— | தோற்கருவிகளில் மத்தளம், சல்லி, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழவம். |
| 13, 14 | உந்தல்— | நரம்புகளைத் தெறித்து அறியும் முறைகளில் ஒரு தொழில். தடவு தள்ளல் உந்தலாகும். |
| 64. 65 | உந்தி— | மூலாதார நாதம் எழுவது எழுமிடம். |
| 131, 132 | உபயம்— | சூரியாங்கம், சந்திராங்கம் எனப் பிரிவு படுத்தப்படும் தோற்கருவி வகைப்பெயர் முறைமையில் இரண்டிற்கும் உரியது. அதிதெய்வங்களுக்கு வாசிக்கும் முறைமையின் பெயர். |
| 138 | உயரம்— | சல்லிகை என்னும் தோற்கருவி உயர அளவு பெற்றது. அறுபத்தெட்டுவிரல் தோற்கருவிகளின் உயரம். |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 1, 2 | உயர் கூத்து— | உயர்ந்த தேவர்களால் ஆடப்படும் கூத்து. |
| 53 | உயர் சந்து— | உயர்ந்த சந்தனமரம். |
| 54 | உயர்ந்த சமநிலம்— | குழல் செய்யும் மூங்கில், செங்காலி, கருங்காலி போன்ற மரவகைகள் விளையும் நிலப்பகுதி. |
| 105 | உரித்தாதல்— | பாணுக்கு இசை உரித்தாதல் பாண்-பாட்டு. |
| 21 | உரிய நரம்புகள்— | ஒரு பண்ணிற்குரிய நரம்புகள் |
| 116 | உருத்தளி— | இது அசையிற் புணர்க்கப்படுவது. |
| 98, 132 | உருத்திரன்— | மூன்றுஞ் சாமத்துப் பண்களால் பாடப்படும் இறைவன் முதற்கடவுள். |
| 13, 14 | உருட்டல்— | உருட்டல் என்ற இசைத் தொழின்முறை, தொழிற்கை எட்டினுள் ஒன்று. |
| 69, 77 | உருட்டு— | மிடற்றுத் தொழில் பத்துவகை அசைவுகளில் ஒன்று. |
| 18, 22 | உழை— | ஏழிசைகளில் ஒன்று மீனராசியில் நிற்பது தெய்வம் மயில்தாங்கியன் உழைதலையில் எனப்படுவதும் அலியிசை என்பதும் வழக்கு. |
| 118 | உரைப்போரையறிதல்— | இசை புணர்க்கும் வகையில் அறியப்படுவது. |

| பக்க என்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 24 | உழை குரலாயது | அரும்பாலை— வலமுறை ஏழ்பெரும்பாலையில் ஒன்று. |
| 24 | உழை குரலாயது | செம்பாலை— குரற்கிரமத்து எதிர்நிரநிறைப் பாலைகளில் ஒன்று. |
| 69 | உள்ளாளம்— | இசைபாடும் தொழில்களில் ஒன்று முதலொலியை எழுப்புதல் |
| 13, 14 | உறழ்தல்— | நரப்புகளை ஆராயும் முறைமைகளில் தெறித்து அறிதலில் உறழ்தல். |
| 121 | உறுப்பு— | பிண்டவகையில் ஒன்று. |

"ஊ"

| பக்க என்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 22, 67 | ஊ— | மூன்றும் இசைக்குரிய நெடில் உயிர்க் குறியீட்டெழுத்து ஆளத்திக்குரிய மூன்றும் நெட்டெழுத்து. |
| 58, 59 | ஊறு— | மண்ணால் உடப்பு ஊருய்ப் பரிணமித்தல் |
| 78 | ஊறிய இசை— | இசைப் புணர்ப்பு ஐந்தனுள் வேறுபாட்டின்பாற்பட்டது. |
| 80 | ஊனம்— | உடம்பின் குறைபாடு. இது உடையவன் பாடுதற்கல்லன். |

"எ"

| பக்க என்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 69, 76 | எடுத்தல்— | இசைக்கிரியை எட்டனுள் முதலாவது. |
| 109 | எண்சிரான்— வந்தபாடல் | தேவபாணிப் பாடல்களில் பெருந்தேவபாணி |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 15 | எண்ணியதானம்–பண்ணாற்ெறுழில் | |
| 142 | எழுத்து— | முழுவு வாச்சியங்களில் பாட எழுத்தாக வாசித்தற்குரிய எழுத்துக்கள். சொற்கட்டெழுத்து. |
| 142 | எழுத்து மரபு— | இந்நூல் வாச்சியமரபின் உட்பிரிவு |
| 115 | எழுத்தால்— | யாழெழுத்துக்களால் |
| 14 | எழுப்புதல்— | பட்டடை முற்றிய இளிதனை எழுப்புதல் |
| 84 | எள்— | மிடற்றுக்காகாதனவற்றுள் ஒன்று. |

" ஏ "

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 23 | ஏ— | நான்காமிசைக்குரிய உயிர்க்குறியீட்டெழுத்து. |
| 70, 83 | ஏடாயகம்— | டாயம் தூக்கித்தாக்குதல் தொழிலைந்துள் ஒன்று. |
| 18 | ஏழு இராசிகள்— | இசை நிறுத்தும் இராசிகளில் ஏழு. இடபம், கற்கடகம் சிங்கம், துலாம் தனுசு, கும்பம் மீனம். |
| 56, 74 | ஏழிசை, | ஏழ்நரம்பு, ஏழோசை வங்கியத்தினிசை எழுத்தாற் பிறக்குங்கால் சரிகமபதநி: என்றும் பிறக்கும். |
| 100 | ஏழாஞ்சாமத்திற்குரிய பண்— | சந்திரனைப் பாடுவது. பெரியவராடி, தீபவராடி, கௌடி, அரியநாட்டம், பெரிய நாட்டம், காந்தார பஞ்சமம், தமிழ்வேளர்கொல்லி பியந்தை என்ற எட்டுப் பண்கள், |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| | "ஐ" | |
| 23 | ஐ— | ஐந்தாமிசைக்குரிய குறியிட்டெழுத்து. |
| 14 | ஐந்தாங்கோல்— | வார்தல், தொழிற்கை எட்டனுள் ஒன்று. |
| 99 | ஐந்தாஞ்சாமத்திற்குரிய பண்கள் : | சதாசிவனைப் பாடுவது. குச்சரி, மல்லாரி மேகராகம், குறிஞ்சி, மாளுவகிரி, தேசற்கிரி, இராமகிரி, கொண்டற்கிரி என்ற எட்டுப்பண்கள். |
| 8 | ஐந்தியல்— | இசை, முழவு, கூத்து தாளம் அவிநயம். |
| 85 | ஐந்துதொகை— | அஞ்சுறுப்பு, பஞ்சமரபு. |
| 71 | ஐந்துநிறம்— | கேத்திராங்கம், சுத்தம் சாளவம் சங்கீரணம் தமிழ். |
| 55, 65 | ஐவகைப்பூதம்— | ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம். |
| | "ஒ" | |
| 66 | ஒ— | ஆளத்திக்குரிய குற்றெழுத்து ஐந்தனுள் ஒன்று. |
| 82 | ஒட்டுதல்— | பாடுவானது தொழிற்கிரியை நான்கனுள் முதலாவது, கண்டத்தொழில். |
| 81 | ஒதுங்கல்— | ஒருக்கியொதுங்கல் பாடுதற் கல்லாத ஒலி வகைகளில் ஐந்தாவது பாடுகிற நிறத்தை ஒதுக்கிப்பாடுவது. |
| 69, 77 | ஒலி— | இசைக்கிரியைகள் எட்டனுள் ஆருவது. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 34, 50 | ஓலிப்பஞ்சமம்— | செந்திறம் செந்துருத்தி மத்தியமாரி ஐந்திசைப்பண்களில் ஒன்று. |
| 59 | ஒளி— | ஒளியாயும், தீயாற்கண் ஒளியாதல் |
| 65 | ஒற்று— | மகரத்தின் ஒற்று (ம்) |

" ஓ "

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 23, 63 | ஓ— | ஆருமிசைக்குரிய குறியிட்டெழுத்து, நெட்டெழுத்து, ஐந்தனுள் ஒன்று ஆளத்திற்குரிய எழுத்து. |
| 53 | ஓங்கிய மூங்கில்— | குழல் செய்ய உத்தமமானது, அது பொழுது செய்யும். |
| 64, 65 | ஓசை— | சரீரத்தில் ஓசை, வானுற் செவியோசை ஓசையும் ஈசனும் ஒக்கும். |
| 80 | ஓசையான்— | மெய்யான ஓசையான் அரங்கத்துப் பாடப்பெறுபவர் பெறுபவர்களில் ஒருவன். |
| 76 | ஓசைப்படுத்தல்— | தானங்கள் எட்டானும் கிரியைகள் எட்டானும் ஓசைப் படுத்தல், அவ்வாறு படுத்த, பண்ணாகும். |
| 80 | ஓசையிலாதான்— | அரங்கத்துப் பாடப் பெருதவர் பெருதவர்களில் ஒருவன். |
| 85 | ஓதியகீதம்— | பாடப்பட்ட கீதங்கள். |
| 78 | ஓரிசை— | ஓரடியான் வரும் சிந்துகளிசை புணர்க்குமிடத்துள்ள எட்டு வகைப் புணர்ப்புள் முதலாவது. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 73 | ஒரோசையாய்— | இது நின்ற காலத்து நிறம் வேற்றுமையில்லை. |
| | "ஔ" | |
| 23 | ஔ— | ஏழாமிசைக்குரிய நெட்டெழுத்து. |
| 31, 34 | ஔடுவம்— | அடுவிகம், ஐந்து ஐந்திசைகொண்டது. |
| | "க" | |
| 86, 134 | கஞ்சம்— | கருவி செய்யப்பெறும் ஒருவகை உலோகம் முழவும் செய்யப்பெறும் குடமுழா, கஞ்சக்கருவி கஞ்சதாளம். |
| 87 | கஞ்சக்கருவி— | கஞ்சதாளம், கைம்மணிதாளம், கொண்டி முதலியன. கஞ்சத்தாற்செய்வது குடமுழவம் |
| 17 | கடகம்— | கற்கடகம், பன்னிரண்டு இராசி களில் ஒன்று விளரி இசை நிற்கும் இராசி. |
| 136 | கடிப்பு— | பேரிகைக்குரிய எட்டு வார்த்துளை. |
| 120, 122 | கடை— | முழவு வகைகளின் ஏழு பெயர் வகை முறைமைகளில் ஒன்று. |
| 127 | கடைக்கருவி— | பறை, பாகம், உடுக்கை, சிறுபறை, அடக்கம். |
| 5 | கடையம்— | ஒருவகைக் கூத்து, பதினொரு ஆடல்களில் ஒன்று, வீழ்ந்தாடல். |
| 82 | கட்டுதல்— | சிறப்புடையனாய் இருந்து பாடுவானது தொழிற்செய்கை. கண்டத்தால் வருவது. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 81 | கட்டை— | பாடுதற்கல்லாத இசை, நிறமுந்தானமுங் குறைவது |
| 121, 127 | கணப்பறை— | வன்மைக்கருவி. பறை வகை |
| 68 | கணம்— | அளவறிமுறை. |
| 7, 74 | கண்டம்— | குரல், கண்டத்தானம், மிடறு, கண்டத்திற் பிறக்கும் இசை, நெறி மூன்றுள் ஒன்று. |
| 57 | கண்டமரபு— | இந்நூல் (பஞ்சமரபு) இசைமரபு உட்பிரிவு—ரு. |
| 55 | கண்படுதல்— | குழல் செய்யுமரத்தை அறியும் வகைகளில் ஒன்று. |
| 86, 122 | கண்விடுதூம்பு- | ஒரு தோற்கருவி, இடைக்கருவி புறமுழவு. |
| 70 | கதி— | நடை ஐந்து தொழில்களில் ஒன்று. |
| 69, 76 | கம்பித்தல்— | கிரியைகளில் ஒன்று. அசைத்துத் தூங்கிசையாகப் பாடுவது. |
| 85, 137 | கரடிகை— | ஒரு தோற்கருவி, சமக்கருவி, உத்தமக்கருவி கனகரடிகை. |
| 10, 134 | கருங்காலி— | ஒருவகை மரம், முழவு செய்யும் மரம், யாழ்க்கோடு செய்யும் மரம். |
| 74 | கலன்— | கருவி, யாழ். |
| 26, 96 | கவுசிகம்— | கௌசிகம், ஆறிசைப்பண்களில் ஒன்று. செய்திறம், வன்மைப்பண். |
| 45 | கவுடி— | கவுரி, கௌடி, தேசிகம் ஆறிசைப் பண்களில் ஒன்று. |

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 150 | கவுத்துவம்— | (இந்நூல் 151ஆம் பக்கம் உரை காண்க) |
| 13, 105 | கவுண்டியன்— | பண் பாடுதற்குரியவர்களில் ஒருவர். |
| 11 | கவ்வரி முண்டகம்— | யாழின் திவவின் கடைக்கண் முடிந்த மணிமுடி. |
| 146 | கவ்வினத்தில்— | க, கி, கு, கெ, இந்த எழுத்துக்கள் முழவு வாச்சியச் சொற்கட்டு எழுத்துக்கள். |
| 46, 99 | கவ்வாணம்— | கௌவாணம், வன்மைப்பண் படுமலைக் கவ்வாணம், ஆறிசைப் பண்களில் ஒன்று, ஆருஞ்சாமத்திற் பாடப்படுவது. |
| 53 | கழை— | மூங்கிற்புல், மூங்கில் குழற்கருவி செய்வதற்கு உத்தமம். |
| 20 | களரி— | இசை. |
| 17, 19 | கன்னி— | பன்னிரண்டு இராசிகளில் ஒன்று. |

"கா"

| பக்க எண்கள் | அரும்பதம் | பொருள் சுருக்கம் |
|---|---|---|
| 82 | காகசுரம்— | பாடுதற்கல்லாத ஒலி, குரல் அமைப்பில், காக்கையின் குரலாவது போலும். |
| 81, 82 | காகுளி— | பாடுதற்கல்லாத ஒலி, பேய் கத்தினாற்போலப் பாடுவது. |
| 88, 99 | காஞ்சி— | மேகாஞ்சி, ஆறிசைப் பண்களில் ஒன்று, மென்மைப்பண் ஆருஞ்சாமத்திற் பாடப்படுவது. |
| 72, 133 | காடுகாள்— | கடையான கடவுள், கடைக் கருவிகட்குரிய தெய்வம். |

